அதிவிஸ்தாரமுமின்றி நடுத்தரமான ஒரு ப்ரபந்தத்தை இயற்றினான். அதை அறிகிறவன் முக்தியை அடைவான். அதில் ஸ்த்ரீகள் சூத்ரர்கள் தாஸர்கள் இவர்கள் அனைவரும் ஸ்ரீமஹாவிஷ்ணுவை அடைவதற்கிடமான தாபம் புண்ட்ரம் முதலிய வைஷ்ணவஸம்ஸ்காரமெல்லாம் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. ஸ்ரீக்ருஷ்ணனுடைய பிள்ளைகளாகிய இந்தப் பதினெண்மர்களுக்குள் ருக்மிணியின் பிள்ளையாகிய ப்ரத்யும்னனென்பவனே முதல்வன். அவன் உருவத்திலும் குணங்களிலும் தந்தையோடொத்தவன். மஹாரதனாகிய அந்த ப்ரத்யும்னன் தன்னுடைய அம்மானாகிய ருக்மியின் புதல்வியை மணம் புரிந்தான். அவனுக்கு அவளிடத்தில் பதினாயிரம் யானை பலமுடைய அநிருத்தனென்னும் புதல்வன் பிறந்தான். ருக்மியின் பெண் வயிற்றுப் பேரனாகிய அவ்வநிருத்தன் அந்த ருக்மின் பிள்ளைவயிற்றுப் பேத்தியை மணம்புரிந்தான். அவனுக்கு அவளிடத்தில் வஜ்ரனென்னும் பிள்ளை பிறந்தான். மௌஸலசாபத்தினாலேற்பட்ட யாதவகுலக்ஷயத்தினின்று அவனொருவனே மிகுந்தான். அவ்வஜ்ரனிடத்தினின்று ப்ரதிபாஹுவென்பவன் பிறந்தான். அவன்பிள்ளை ஸுபாஹு. அவன்பிள்ளை தர்மஸேனன். அவன்பிள்ளை ஶ்ருதஸேனன். இந்த வம்சத்தில் பிறந்தவர்கள் பணமில்லாதவர்களாகவாவது, பல புதல்வர்களைப் பெறாதவர்களாகவாவது, ஆயுள் அற்பமாயிருக்கப் பெற்றவர்களாகவாவது, அற்பவீர்யர்களாகவாவது, ப்ராஹ்மண குலத்திற்கு வேண்டியவற்றை நிறைவேற்றாதவர்களாகவாவது பிறக்கவில்லை. யதுவம்சத்தில் பிறந்தவர்களெல்லோரும் புகழ்பெற்ற செயலுடையவர்கள். அனேகமாயிரமாண்டுகள் எண்ணினும் அவர்களை எண்ணி

முடியாது. யதுகுலகுமாரர்களுக்குக் கல்வி கற்பிக்கும் ஆசார்யர்கள் மூன்று கோடியே எண்பத்தெண்ணாயிரத்து முந்நூறு பேர்களென்று கேள்வி. (ஆசார்யர்களே இத்தனை பேர்களாயின் படித்த பிள்ளைகள் எத்தனை பேர்களாயிருப்பார்களென்று நீயே ஊஹித்துப் பார்.) யதுவம்சத்தில் அடங்கிய வஸுதேவனொருவனே பதினாயிரம் பதினாயிரலக்ஷம் பிள்ளைகளுடையவன். மஹானுபாவர்களான யாதவர்களெல்லோரையும் எவன்தான் எண்ணவல்லவன்? தேவாஸுரயுத்தத்தில் மிகவும் பயங்கரர்களான அஸுரர்கள் எவரெவர் அடியுண்டு மாண்டார்களோ; அவர்களெல்லாரும் மனுஷ்யஜாதியில் சிசுபாலன் ஜராஸந்தன் முதலியவர்களாகப் பிறந்து கொழுத்து ப்ரஜைகளைப் பீடித்துக்கொண்டிருந்தார்கள். தேவதைகள் அவர்களை நிக்ரஹிக்கும் பொருட்டு ஸ்ரீமஹாவிஷ்ணுவால் நியமிக்கப்பட்டு யதுகுலத்தில் பிறந்தார்கள். இவர்கள் வ்ருஷ்ணிகள் அந்தகர் தாசார்ஹர் என்னுமிவை முதலாக நூற்றொருவம்சங்கள். பகவான் அந்த யாதவகுலங்களுக்கு ப்ரபுவாக ஸ்ரீக்ருஷ்ணரூபியாய் அவதரித்தான். யாதவர்கள் எவரெவர் உண்டோ அவர்கள் எல்லோரும் ஸ்ரீக்ருஷ்ணனைத் தொடர்ந்து வளர்ந்து வந்தார்கள். அந்த யாதவர்கள் படுத்தல் உட்காருதல் உலாவுதல் பேசுதல் விளையாடுதல் நீராடுதல் புசித்தல் முதலிய எல்லாச் செயல்களிலும் ஸ்ரீக்ருஷ்ணனிடத்திலேயே நிலைநின்ற மனமுடையவர்களாயினும் அவன் தங்களுக்கு அந்தராத்மாவான பரமாத்மாவென்று அறியாமல் தங்களைப்போல் யாதவர்களில் ஒருவனென்றே நினைத்திருந்தார்கள். மன்னவனே! இதற்கு முன்பு பகவானுடைய ஸ்ரீபாததீர்த்தமும் தேவநதியுமாகிய கங்கையே புண்யதீர்த்தங்களெல்

லாவற்றிலும் மேலாயிருந்தது. இப்பொழுதோவென்ருல் அப்பகவான் யதுகுலத்தில் ஸ்ரீக்ருஷ்ணனுய் அவதரித்துத் தன் புகழாகிற புண்யதீர்த்தத்தை எங்கும் வெள்ளமிடச்செய்து அக்கங்கையை அற்பமாக்கினுன். அந்த ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் ஓயாமல் த்வேஷஞ் செய்த சத்ருக்களும் அனுராகஞ் செய்த நண்பர்களும் அவனேடு ஸாரூப்யத்தை அடைந்தார்கள். எவனுடைய கடாக்ஷத்தின் சிறுதுளி தங்கள்மேல் விழவேண்டுமென்று ப்ரஹ்மருத்ராதிகளான மற்றவர்களெல்லாரும் ப்ரயத்னஞ் செய்கிருர்களோ, அத்தகையளும் ஒருவராலும் வெல்லப்படாத பாதாரவிந்தங்களுடையவளுமாகிய ஸ்ரீமஹாலக்ஷ்மி இந்த ஸ்ரீக்ருஷ்ணனுக்கே அனன்யார்ஹசேஷமா யிருப்பவள் (மற்ருெருவர்க்கும் உரியளாகாதபடி அவனுக்கே சேஷமாயிருப்பவள்). மற்றும், இந்த ஸ்ரீ க்ருஷ்ண பகவானுடைய பெயரைக் கேட்கிலும் சொல்லிலும் அதன்பொருள் தெரியாமற் போயினும் அது அவர்களுடைய அமங்களங்களையெல்லாம் போக்கும். மற்றும், இவன் அந்தந்த யாதவகுலங்களில் தர்மங்களையெல்லாம் நடத்தினுன். மற்றும் அவன் காலத்திற்கு அபிமானியாகிய ஸுதர்சனசக்ரத்தை ஆயுதமாகவுடையவன். அத்தகையனுகிய இந்த ஸ்ரீ க்ருஷ்ணன் இப்பூமியின் பாரத்தை நீக்கினது ஓராச்சர்யமன்று. இம்மஹானுபாவன் தேவகியிடத்தில் பிறந்தானென்பது வெறும் பேச்சுமாத்ரமேயன்றி உண்மையன்று. இவன் ஜனங்களுக்கெல்லாம் தான் ஆதாரமும் ஜனங்களைத் தனக்கு ஆதாரமாகவுடையவனுமாயிருப்பவன். இவன் யாதவக் கூட்டங்களாகிற தன் புஜங்களால் அதர்மத்தை நீக்கும்பொருட்டே அவதரித்தான். (இவன் பூமியில் அவதரித்தமைக்கு

அதர்மத்தைப் போக்குவதுமாத்ரமே முக்யப்ரயோ ஜனமன்று. அதை அவன் கேவலம் தன் ஸங்கல்பத்தி னால் நடத்தவல்லவன். ஆனால் பின்னை எது முக்யப்ர யோஜனமென்றால்,) இவன் ப்ருத்தாவனாதி இடங்களி லுள்ள மரம் செடி கொடி முதலிய ஸ்தாவரங்கள் பசு பக்ஷிமுதலிய ஜங்கமங்கள் ஆகிய இவற்றின்பாபங்களைத் தன் ஸம்பந்தத்தினால் போக்கும்பொருட்டே அவதரித் தான். இவன், அழகிய புன்னகை அமைந்த தன் திரு முகத்தினால் இடைச்சேரியிலுள்ள மடந்தையர்களுக் கும் பட்டணத்து மடந்தையர்களுக்கும் காம விகாரத் தை வளரச் செய்து அவ்வழியில் அவர்களை அங்கீகரித் தான். இத்தகையனாகிய ஸ்ரீக்ருஷ்ண பகவான் மிகுந்த மேன்மையுடன் விளக்கமுற்றிருக்கின்றான். இந்த ஸ்ரீ க்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களில் தனக்குப் பக்தி விளையவேண்டுமென்று விரும்புகிறவன், தன்னுடைய ஆஜ்ஞாரூபமான வேதத்தில் விதிக்கப்பட்ட தர்ம மர் யாதையைக் காக்கும்பொருட்டு லீலைக்காகத் திருவுரு வத்தை ஏற்றுக்கொண்ட யாதவஶ்ரேஷ்டனாகிய பரம புருஷன் இங்ஙனம் மனுஷ்யசேஷ்டைகளை அனுஸரித் துச்செய்தவைகளும் கேட்பவர்களுக்கும் சொல்பவர்களு க்கும் பாபங்களைப்போக்கி நிரம்பவும் பக்தியோகத்தை விளைக்க வல்லவைகளுமான அவனுடைய திவ்யாவதார சரித்ரங்களைக் கேட்கவேண்டும். மனுஷ்யன் ஸந்தி களதோறும் ஸ்ரீக்ருஷ்ணனுடைய அழகான கதை யைக் கேட்பதும் சொல்லுவதும் செய்துகொண்டு அவன் விஷயமான சிந்தையை மேன்மேலும் வளர்த் திக்கொண்டு வருவானாயின், கடக்க முடியாத யம னிடம் அகப்பட்டு வருந்தும் ப்ராணிகளின் துக்கங்களை முடிப்பதாகிய அப்பகவானுடைய ஸ்தானத்தை அடை

வான். இந்த ஸ்தானத்தைப் பெற விரும்பியே பற்பல மன்னவர்களும் தவஞ் செய்யும்பொருட்டு க்ராமத்தினின்று வனஞ் சென்றார்கள். (அப்படிப்பட்ட விஷ்ணுவின் ஸ்தானத்தை அவனுடைய குண சரித்ரங்களைக் கேட்டு அதில் சிந்தனை வளரப்பெற்றவன் அனாயாஸமாகப் பெறுவான்). தொண்ணூறாவது அத்யாயம் முற்றிற்று.

பத்தாவது ஸ்கந்தமும் முற்றுப்பெற்றது.

ஸ்ரீ க்ருஷ்ணார்ப்பணமஸ்து.

